# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | பிரணவம் |
| ஆசிரியர் | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | உபதேசம் |
| முதற்பதிப்பு | : | 2020 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 45 |
| தாள் | : | A5 (5.83” X 8.27”) |
| எழுத்து அளவு | : | 12 புள்ளிகள் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| விலை | : | அகவிழிப்பு |

ஓம் ஸ்ரீ குருப்யோ நம:

# பிரணவம்



**சுவாமி பிரபஞ்சநாதன்**

# பிரணவம்

உலகில் உள்ள அனைத்து அறிவியல் ஆராய்ச்சிகட்கும் ஆதார வித்தாய், அகண்ட ஞானமாய், சிந்தனைக்கு உணவாய், செயலுக்கு விளக்கமாய் இருந்து, உலகினை ஆட்கொண்டு ஆட்சி செய்வது ஒலி, ஒளிவடிவான இரு சக்திகளே '**பிரணவம்**' ஆகும்.

பிரபஞ்சத்தின் தோற்றத்தில் முதலில் தோன்றியது ஒலி. தொடர்ந்து பின்னர் காணப்பட்டது ஒளி! அண்டத் தோற்றத்தின் ஆதியும், ஆதாரமுமான இவ்விருசக்திகளே பின்னர் தொடர்ந்த படைப்புகளுக்கும் அடிப்படைத் தத்துவங்களாயின.

இந்த அறிவியல் பேருண்மையை உலகிற்குச் சொன்ன முதல் விஞ்ஞானிகளே! நம் சித்தர் பெருமக்கள். இவ்விரு ஆதார சக்திகளையே ஆண்டவனாக நம்மவர்களால் ஆராதிக்கப்பட்டு வழிபாடு செய்யப்பட்டன.

சித்தர் பெருமக்கள் இவ்விரு சக்திகளை அகரம், உகரமாய் தொழுது வணங்கினார்கள். சித்தர் பெருமக்கள் கண்டறிந்த இவ்விரு சக்திகளின் சேர்க்கையே பரம்பொருள் சொரூபமாயிற்று.

பரம்பொருள் என்றால் பிரபஞ்சம் உருவாதற்க்கு முன் இருந்த ஒரு பொருளாகும். அப்பொருளிலிருந்து உருவானதே அண்டசராசரங்கள் முதற்கொண்டு அனைத்து ஜீவராசிகளும்.

அந்தப் பரம்பொருளே ஆதியும், அந்தமுமற்ற பரசிவம் எனப்படுகின்றது. பிரபஞ்சம் உருவாவதற்க்கு தேவையான சக்தியே பராசக்தி எனப்படுகின்றது.

ஆக, **அ** என்ற அகரம் - **அரன்** (சிவன்), **உ** என்ற உகரம் - **உமை** (சக்தி) என்பதின் அடிப்படையில், இந்த சிவமும், சக்தியும் இணைந்த (அ+உ=ம்) பிரபஞ்சத்தின் தோற்ற சப்தமே “**ஓம்**” என்ற ஓங்கார ஒலி எனப்படுகின்றது.

ஆகவே, சக்தி இல்லையேல், சிவம் இல்லை, சிவமில்லையேல் சக்தியில்லை. இவ்விருவரும் இல்லையேல் அண்டசராசரங்களும், ஜீவராசிகளும் இல்லை.

அதுவே, **பிறப்பு - இறப்பு** ஏதுமற்ற ஏகாந்த நிலை.

பரம் என்றால், ஆற்றல் அல்லது **சக்தி** (ENERGY) என்றும், பொருள் என்றால் **இருப்பு** அல்லது பிரம்மம் (MATTER) என்றும் கொண்டு, இந்த இரண்டும் தனித்தனியாக இருக்கும்போது, இயக்கமற்று சும்மா கிடக்கும் எனவும், இந்த இரண்டும் ஒன்று சேரும்போது மட்டுமே இயக்கம் நடைப் பெறுகிறது எனவும் அறியப்படுகின்றது.

அகர, உகரங்களோடு மகரச்சேர்க்கை, “ஓம்” எனும் ஆதி மந்திரப் பிரணவமாகப் பிறப்பெடுத்தது. அகத்தியர் அருளிச்செய்த அற்புதமான பாடலைக் காண்போம்.

**“ஓமென்ற பிரணவமே ஆதி வஸ்து**
**உலக மெல்லாந் தானிறைந்த யோமசத்தி**
**தானென்ற சத்தியடா எவரும் தானாய்**
**சதா கோடி மந்திரத்துக்கு உயிராய் நின்று**
**ஆமென்று ஆடினதும் ஓங்காரம் தான்**
**அடி முடியாய் நின்றதும் ஓங்காரம் தான்**
**நாமென்ற ஓங்காரம் தன்னிலே தான்**
**நாடி நின்ற எழுவகை பிறப்புமாச்சே”**

- அகத்தியர் அந்தரங்க தீட்சாவிதி.

ஓங்காரமென்ற பஞ்ச பூதத்தில் தான் “அ” எனும் நாதம் அடி முடியாய் நின்று எழு வகையான தோற்றமாய் புலனாகிறது.

“அ” என்பதே ஆதி வஸ்து. அனைத்து மந்திரங் களுக்கும் அடிநாதமாயிற்று. அதுவே அடியும் முடியுமாகும் என்பது இதன் பொருள்.

ஆதியில் ‘ஓ’ வாக, ஒடுக்கமாக இருந்த இறைவன் ஒரு புள்ளி. அந்த புள்ளி வெடித்துச் சிதறியது. அப்பொழுது அகர, உகர, நாத, விந்து என்னும் சக்தி துகள்கள் வெளிப்பட்டன.

அதுவே "**ஓம்**" என்ற ஒலி மற்றும் ஒளி ஆனது.

அந்த வெடிப்பில் (அசைவில்) முதலில் '**ஒலி**' தோன்றி, அதன்பிறகே '**ஒளி**' தோன்றியதை அறியலாம்.

'**நாதம்**', '**விந்து**' என இரண்டு சொற்களை சமயத்தில் தோற்றக் குறியீடுகளாகக் குறிப்பிடுவர்.

'**நாதம்**' என்பது "**ஒலி**". '**விந்து**' என்பது "**ஒளி**".

இந்த "**ஓம்**" என்ற ஒலி வடிவ இறைவனுடன் நாம் உள்ளொளி பெருக்கி, அந்த ஒளியான இறைவன் அனைத்து உயிர்களின் அகத்திலும் அந்தர்யாமியாக இருக்கிறான் என்பதை அறிந்துணந்து, அந்த ஒளியே அகத்தீ என்பதைக் கண்டு, அதன் வாயிலாக முக்தி அடையலாம்.

இந்த பிரணவ ஒளியை 'ஓம்' என்பதா? அல்லது 'ஆம்' என்பதா? என்ற சந்தேகம் எழுகின்ற பொழுது, அதற்கான விடையையும் அகத்தியர் இங்கு அளிக்கின்றார்.

சதா கோடி மந்திரத்திற்கு உயிராய் நின்று
ஆம் என்று ஆடினதும் ஓங்காரம் தான்

அதாவது, நூறு கோடி மந்திரங்களுக்கும் உயிராய் இருந்து "**ஆம்**" என்று இயங்குவது ஓங்காரம்தான்.

எனவே பிரணவத்தை ‘ஓம்’ என்றோ அல்லது ‘ஆம்’ என்றோ உச்சரிக்கலாம்.

ஏன்? ஆம் என்றும் உச்சரிக்கலாம் என்கிறார்கள் என்றால், நாமென்ற ஓங்காரம் தன்னிலேதான், நாடிநின்ற எழுவகை பிறப்புமாச்சே என்கின்றார்.

ஆதியில் ஓ - வாக, ஒடுக்கமாக இருந்த இறைவன் ஒருபுள்ளி. அல்லது அணு. அது வெடித்து சிதறியது. அப்பொழுது அகர - உகர, நாத - விந்து என்னும் சக்தி துகள்கள் வெளிப்பட்டன. என்பதைப் பார்த்தோம்.

நவீன விஞ்ஞானத்தில் ஒலியாகிய இறைவனனை, அகரம் = அ = எதிர்மறை சட சக்தி துகள் எனவும். ஒளியாகிய சக்தியை, உகரம் = உ = நேர்மறை சட சக்தி துகள் எனவும் கொள்ளப்படுகின்றது. அவ்வாறே, ஒலியாகிய இறைவனனை விந்து = எதிர்மறை உயிர் சக்தி துகள் எனவும், ஒளியாகிய சக்தியை நாதம் = நேர்மறை உயிர் சக்தி துகள் எனவும் அழைக்கப்படுகின்றது.

அகரம், உகரம் சக்தி துகள்களால் மோதி மகரம் என்ற புதிய சக்தி துகள் உருவானது.

இதிலே, அ = சிவன், உகரம் = சக்தி எனக்கொண்டு, சிவன்+சக்தி இணைப்பாகிய அர்தநாரீஸ்வரன் என்ற ஆண், பெண் இணைப்புதான் “**ஓம்**” என்ற உயிர்கள் உருவாவதற்குக் காரணமாக உள்ளன.

ஆகையால் ‘ஓம்’ என்பதும் ‘ஆம்’ என்பதும் ஓங்கரத்தின் விரிவு நிலை. இந்த விரிவு நிலையில் மட்டுமே இந்த பிரபஞ்ச உயிர்கள் ஏழுவகைப் பிறப்பினை மேற்கொள்கின்றன.

**“ஆதியிலே பராபரத்திற் பிறந்த சத்தம்**
**அருவுருவாய் நின்றபர சிவமு மாகிச்**
**சோதியென்றே சிவனிடமாய்ச் சக்தி யாகித்**
**தொல்லுலகில் எழுவகையாந் தோற்றமாகி”**

- சுப்பிரமணியர் ஞானம்.

இதையே கருவூரார் என்ற சித்தர் தமது பாடலில்,

**“ஆமெனவும் ஊமெனவும் மிரண்டுங் கூட்டி**
**அப்பனே ஓமென்ற மூன்றும் ஒன்றாய்**
**நாமெனவும் தாமெனவு மொன்றேயாகும்**
**நல்லவர்கள் அறிவார்கள் காமி காணார்”.** என்கின்றார்.

இந்த **அகர,** உகர சேர்கை என்பதை அறிவதற்கு முன்பு, சித்தர்களின் சில அடிப்படை கட்டமைப்புகளைக் காணலாம்.

அகரம் - உகரம், விந்து - நாதம், அண்டம் - பிண்டம், உட்கரு - வெளிகரு, சக்தி - சிவன், உப்பு - புளி, காரம் - சாரம், எட்டு - இரண்டு என்னும் சொற்களின் தொடர்கள் அனைத்துமே இரண்டு பொருட்களை ஒன்றாக சேர்க்கும் பரி பாஷைகள் எனப்படுகின்றது.

ஒரு சொல்லுக்கு பல பொருள் இருக்கும். பல சொற்களுக்கு ஒருபொருள் இருக்கும். இந்த பரிபாசைகளுக்கு பொருள் நிகண்டு என்ற நூல்களில் கூறப்பட்டிருக்கும்.

இதுமட்டுமல்லாமல், தலைப்பிள்ளை, பிண்டம், வாலை, துமை, ஊமை என்பதற்கு நூற்றுக்கணக்கான வியக்கியா னங்களும் உண்டு. இவைகள் அனைத்துமே ஒவ்வொரு குரு பரம்பரைக்கும் ஏற்ப நிகண்டு என்று அழைக்கப்படுகின்ற அகராதி மாறுபடும்.

உதாரணமாக, திருமூலர் பரம்பரை என்பது சிவனை அடிப்படையாகக் கொண்டது. அவரது சீடர் காளங்கி, அவரது சீடர் போகர். போகரின் சீடர் புலிப்பாணி. அவ்வாறே, அகத்தியர் பரம்பரையில் தமிழ் கடவுளான முருகனை அடிப்படையாகக் கொண்டது. அவ்வாறே, நந்தி பரம்பரையும் சிவனை அடிப்படையாகக் கொண்டது. இவ்வாறு பல குரு - சிஷ்ய பரம்பரைகள் உள்ளன.

ஒவ்வொரு பரம்பரையை சேர்ந்தவர்கள் அவர்களின் பரம்பரை நூல்களில் உள்ள பரிபாசைக்கு தனித்தனி நிகண்டுகள் செய்துள்ளனர். உதாரணமாக, போகர் நிகண்டு 1200, அகத்தியர் பஞ்ச காவிய நிகண்டு 800, நந்தீசர் நிகண்டு 300 ஆகியவைகள் இதில் அடங்கும்.

அகர, உகர சேர்கையில், **அகரம் - உகரம்** அல்லது **எட்டு - இரண்டு** என்பதை சித்தர் பெருமக்கள் பரிபாசைப் பாடல்களாகப் பாடியுள்ளனர்.

இந்த இரண்டும் பக்தியிலும், கர்மத்திலும் சித்திகளாகக் கூறப்படுகின்றது.

பக்தியோகத்தில் இறைவனோடு பக்தன் இணைந்து இருப்பது. இந்த இணைப்பினை இருபது வகைகளாகப் பிரித்து உள்ளார்கள். அவைகளில், ஒன்று **மஹாபாவம்** மற்றது **பிரேமபாவம்** எனப்படுகின்றது.

இறைவனிடம் எல்லையற்ற தூய அன்பே மஹாபாவம் எனப்படுகின்றது. இதை திருமூலர் தமது திருமந்திரத்தில் "**அன்பேசிவம்**" என்கின்றார்.

அவ்வாறே, நாரதர் விஷ்ணுவிடம் வைத்த அன்பு மஹாபாவம் எனப்படுகின்றது. இங்கு இவர்கள் இருவருக்கும் இணைப்பாக இருப்பது **அன்பு** ஒன்று மட்டுமே.

விஷ்ணு = (அ) அகரம்,
நாரதர் = (உ) உகரம்
அன்பு = (ம) மகரம்.

பிரேமபாவம் என்பது இறைவனை காதல் கொள்ளுதல், அல்லது பக்தி கொள்ளுதல் எனப்படுகின்றது.

"**காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி**" என்றார் மணிவாசகப் பெருமான். அவ்வாறே, ராதை கண்ணனிடம் கொண்ட காதல் **பிரேமபாவம்** எனப்படுகின்றது.

உண்மையான அன்பு, பக்தி செய்தவருக்கே யோக சித்திகள் வாய்க்கும் என்பதினால், அத்தகைய தூய அன்புக்கு, அதாவது பக்திக்கு சித்தர்கள் என்றுமே எதிரிகள் இல்லை.

ஆனால், பக்தியின் பெயரால் ஏமாற்றுபவர்க்கும், மூட பக்திக்கும் மட்டுமே இவர்கள் எதிர்ப்பாளர்கள் எனலாம்.

பக்தி குருமார்கள் இந்த அகர, உகரத்தைப் பற்றி அவ்வளவாக விளக்கிக் கூறுவது கிடையாது. அதுவே யோகத்தில் யோக சித்தியான குருமார்கள் மட்டுமே இதனைப்பற்றி எடுத்துக் கூறுகின்றார்கள்.

அவ்வாறே, வேதை சித்தியில் முப்பூ முடித்த குருமார்களும் இதைப்பற்றி இன்னும் சற்று விளக்கமாகக் கூறுகின்றார்கள். ஆனால், அவர்களை அவ்வளவு எளிதாக அடையாளம் காண்பது அரிது.

இவ்விரு வடிவங்களான அகர - உகர, ஒலி - ஒளி, சிவன் - சக்தி என்பனவற்றை மதங்களும் தெய்வமாகத் துதித்து வழிபாடு செய்தன.

இறைவன் நாம் கண் இமைக்கும் பொழுது கூட, நம் உயிரை விட்டுப் பிரியாமல் இருக்கின்றான் என்பதனை, **“இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான்”** என்பார் மணிவாசகப் பெருமான்.

இறைவன் எப்போதும் உயிரில் பிரிவின்றி ஒன்றாகவே இருக்கின்றான் என்பதனைப் பலரும் உணருவதில்லை!

நாம் உய்வதற்காகவே இறைவன் நம் உயிரையும், உடலையும் விட்டு நீங்காமல் இருக்கின்றான் என்று தமிழ்ச் சைவர்களின் இறைக் கொள்கையை விளக்குகின்ற சித்தாந்த நூல்களும், சைவ மெய்கண்ட நூல்களும், திருமுறைகளும், சிவ ஆகமங்களும் குறிப்பிடுகின்றன.

உயிர்களைப் பிணித்துள்ள அறியாமையை நீக்கி, உயிர்களை மேல்நிலைக்குக் கொண்டுச் செல்லவே, அழுக்கு நிறைந்த புழுக்கள் நெளியும், இந்த உடலில் இறைவன் பரிவோடு தங்கி இருந்து அருள் செய்கின்றான் என்று அவைகள் குறிப்பிடுகின்றன.

இவ்வாறு நம் உடலில் தங்கி இருந்து நம் உடலை இயக்கும் இறைவன் எவ்வடிவில் உயிரிலும், உடலிலும் காத்து இருக்கின்றான் என்பதனை உணர்த்தவே, "**உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா**" என்று மணிவாசகப்பெருமான் திருவாசகத்தின் சிவபுராணத்தில் குறிப்பிடுகின்றார்.

ஓங்காரம் உருவமற்ற பரம்பொருள் (அ) இறைவன்.

வேதங்களில் '**நான் பிரணவம்**' என்கிறார் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர். பிரணவம் அல்லது ஓங்காரம், ஆதி மூலமான சப்தமாகும்.

சப்தம் எங்கும் நிறைந்துள்ளது. எல்லாச் சப்தங்களும் ஆதி சப்தமான பிரணவத்தின் விகாரங்களே (மாறுபாடுகளே). அகரம், உகரம் சேர்ந்த மகரம் ஓங்காரமாகிறது.

அகரம் பிரம்மாவின் படைப்புத் தத்துவத்தையும், உகரம் விஷ்ணுவின் காப்புத் தத்துவத்தையும், மகரம் ருத்ரனுடைய அழிப்புத் தத்துவத்தையும் குறிக்கின்றன.

இவ்வாறு, மகரம் ருத்ரனுடைய அழிப்புத் தொழிலைச் செய்வதினால், தனியாக ஓம் என்று உச்சரிக்கக் கூடாது என்று சிலர் குழப்பி விடுவர்.

ஆனால், அது உண்மையல்ல, ஏனெனில், இந்த பிரபஞ்சம் தோற்றம், இயக்கம், இறுதியில் ஒடுக்கம் என்று ஒரு வட்டம் சுற்று சுற்றி வருவதே அதன் நியதி. இவ்வாறு இந்த பிரபஞ்சம் ஒடுங்கி விரிவதை உயிர்களின் பிறப்பு - இறப்பு என்கின்றோம்.

அவ்வாறு பிறக்கின்ற உயிர்கள் அவைகளின் கர்ம வினைகளுக்கு ஏற்ப, பல்வேறு உடல்களில் எழு வகையான பிறவிகளில் பிறந்து, இயங்கி, இறுதியில் இறந்து, மீண்டும் மற்றொரு உடலில் பிறக்கின்றது என்பதை ஒரு வட்டமாகச் சுட்டிக்காட்டுவதையே ஆதிகுரு தக்ஷிணாமூர்த்தி தனது சின் முத்திரையில் விளக்குகின்றார்.

‘**அ**’ என்ற ஒலி - தொண்டையில் எழுகிறது.

‘**உ**’ என்ற ஒலி - நாக்கிலிருந்து எழுகிறது.

‘**ம்**’ என்ற ஒலி - உதடுகளிலிருந்து உண்டாகிறது.

அகர ஒலியில் மெல்ல ஆரம்பித்து, உகர ஒலியில் சப்தம் அதிகரித்து, மகர ஒலியில் மெல்ல சப்தம் ஒடுங்குவதையும், இந்த ஓங்காரத்த்தில் காண முடிகின்றது.

ஓங்காரத்தின் சிறப்பு. இச்சா சக்தி ஓர் அருள் வீழ்ச்சியாகும். அது சுத்தமாயையாகிய சக்கரத்தில் விழுந்து சக்கரத்தை சுழலச் செய்கிறது. இவ்வாறு சுத்தமாயை சுழல்வதால் குடிலா சக்தி பிறக்கிறது. அந்தக் குடிலா சக்தியின் வடிவமே “**ஓம்**” எனப்படுகின்றது.

நாத, விந்து எனப்படுவதில், சுழலும் வட்டமான சுழியே விந்து எனப்படும். சுழியுடன் நீண்டு பிறக்கும் கோடுதான் நாதம். விந்து சுழன்று நாதம் நேராய்ப் பிறக்கிறது. சுழியும், கோடும் சேர்ந்துதான் ‘உ’ என்ற பிள்ளையார் சுழி ஆக கூறப்படுகின்றது.

‘**நாதவிந்து கலாதி நமோநம**’ - திருப்புகழ்.

எனவே பராசக்தி, ஆதிசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி, இச்சாசக்தி, குடிலாசக்தி என்ற ஆறும் சிவபெருமானின் தனிப்பெருங்கருணையின் விளைவு.

ஊழிக்காலத்தில் ஒடுங்கும் அனைத்தையும் இறைவன் ஓங்காரத்தில் ஒடுக்குகிறார். ஓங்காரத்திலிருந்தே அனைத்து அண்டசராசரங்களும் தோன்றுகின்றன. இந்த தோற்ற ஒடுக்கம் இடையறாது நிகழ்ந்துக் கொண்டே இருக்கின்றது.

**“ஓங்காரத்தின் உள்ளே ஒடுங்கிய ஐம் பூதங்கள்**
**ஓங்காரத்தின் உள்ளே உதித்த சராசரம்”** - திருமந்திரம்.

பிரணவம் இரண்டாகப் பிரிகிறது. அவைகளை **சமஷ்டி பிரணவம், வியஷ்டி பிரணவம்** எனப்படுகின்றது.

சமஷ்டி பிரணவம் ‘**ஓம்**’ என்பதன் தொகுப்பு.

வியஷ்டி பிரணவம் **அகர, உகர, மகாரம்** என வகுத்துக்கூறுவது.

‘**அ**’ என்னும்போது வாய்திறக்கிறது. ‘**உ**’ என்னும் போது குவிகிறது.

**அகரம்** உயிர்களைப் பிறப்பிக்கிறது. **உகரம்** உடல்களைக் காக்கிறது.

அதிக முயற்சியின்றி இயல்பாக ஒரு முறை வாய் திறந்து மூடுவதாலேயே பிரணவம் மனிதனை விட உயர்வு பெறுகிறது. இறைத்தன்மையுடைய ஒலியாகிறது!

ஐந்து நிலை. **அகர, உகர, மகர, விந்து, நாதம்** இவை ஐந்தும் **பிரம்மா, திருமால், ருத்திரன், மகேசன், சதாசிவம்** ஆவர்.

இதனை சிவஞானபோதம் கூறுவதைக் காணலாம்.

**எண்ணிலவு ஓங்காரத்து ஈசர் சதாசிவம்**
**தண்ணிய விந்துவொடு நாதத்து - கண்ணில்**
**பகர் அயன், மாலோடு, பரமன் ஆதிதெய்வம்**
**அகர, உகர, மகார மதாம்**. - சிவஞானபோதம்.

திருமூலரும், மெய்கண்டாருமாகிய தமிழ் ஞானிகள் ஓங்காரத்தை விளக்கியது போன்றே, உபநிஷதங்களும் உயர்வாய் கூறுவதையும் காணலாம்.

வியஷ்டி பிரணவம் அகர, உகர, மகாரம் என மூன்று பாகங்களால் சொன்னது. நான்காவது பகுதியாகிய துரியம் என்பதும் உள்ளதை உபநிஷதங்களால் அறியலாம்.

மாண்டூக்ய உபநிஷதம் இறந்தகாலம், எதிர்காலம், நிகழ்காலம் எல்லாம் ஓங்காரம்தான் என்கின்றது. மேலும், முக்காலத்துக்கும் அப்பாற்பட்டதும் ஓங்காரமே! ஓங்காரத்தின் பெருமையை இந்த உபநிஷதம் விரிவாகக் கூறுவதால் இதற்கு '**ஓங்காரோபநிஷதம்**' என்ற பெயரும் உண்டு.

'**அகரம்**' நம் விழிப்பு நிலையான 'வைச்வானரன்' என்றும், '**உகரம்**' கனவு நிலையான 'தைஜஸன்' என்றும்,

மற்றும் ‘**மகரம்**’ ஆழ்ந்த உறக்கநிலையான ‘ப்ராக்ஞன்’ என்றும் கூறப்படுகின்றது.

நான்காவது பகுதியான துரியம் செயல்களற்றதும், புரிந்துக் கொள்ள முடியாததும், பிரபஞ்ச உண்மையைக் கடந்ததும், மங்களமானதும் மற்றும் இரண்டற்றதுமாகும்.

ஜீவன்களும் பிரம்மமேயன்றி வேறில்லை என்பதை இந்த உபநிஷதம் ஓங்காரத்தின் மூலம் அத்வைத நிலையை விளக்குகிறது.

தியானமும் உச்சரிப்பும். “**ஓங்காரத்தை முழுமன ஒருமைப்பாட்டுடன் தியானிப்பதால் வேதாந்த உண்மைகள் அனுபவ உண்மைகளாகின்றன**” என்று அருணகிரிநாதரின் திருப்புகழ் கூறுகிறது.

எப்படி மணியோசை அமைதியிலிருந்து எழுந்து உயர்ந்து, பின் அமைதியிலேயே கரைகிறதோ அதேப்போன்று, ஓங்காரத்தை உச்சரிக்கும் போது முதலில் மென்மையாக ஆரம்பித்து, சிறிது சிறிதாக ஒலியை அதிகமாக்கி, மீண்டும் மென்மையாக நிறுத்தப்பட வேண்டும்.

அதாவது, எண்ணெய் ஒழுக்குபோல், உச்சரிக்கும்போது இடைவெளி வரக்கூடாது.

“**தைலதாராமி வாச்சிந்தம்**” - தியானபிந்து உபநிஷதம் 18

பிரணவ மந்திரத்தை மேலான ஒளி உருவில் தியானிக்க வேண்டுமென்று சாண்டில்ய உபநிஷதம் கூறுகிறது.

இறைவடிவமான ஓங்காரத்தை இதயத் தாமரையின் மத்தியில் கைப்பெருவிரல் அளவிலான அசைவற்ற தீபமாக தியானிக்க வேண்டும் என்று தியானபிந்து உபநிஷதம் தெளிவு படுத்தியுள்ளது.

**அகாராதி த்ரயாணாம் ஸர்வகாரண ஏகாக்ஷரம் பரம்ஜ்யோதி:**
**பிரணவம் பவதி தியாயேத் ||** - சாண்டில்ய உபநிஷதம் 1-6

**ஹ்ருத் பத்ம கர்ணிகா மத்யே ஸ்திரதீப நியாக்ருதிய:**
**அங்குஷ்ட மாத்ர மசலம் த்யாயேத் ஓங்கார மீச்வரம் ||**
- தியானபிந்து உபநிஷதம் 19

பலன்கள் **"ஓங்காரத்தை வாழ்நாள் முழுவதும் தியானிக்கின்ற ஒருவன் எந்த உலகத்தை அடைகிறான்?"** என்று சத்யகாமன் என்னும் சீடன் குரு பிப்பலாதரிடம் கேட்டான்.

**பிப்பலாதர் அளித்த பதில்**: ஓங்கார மந்திரம் உயர்நிலை, சாதாரணநிலை என்று இறைவனின் இரு நிலைகளாக உள்ளது.

தியானிப்பவன் இரண்டு நிலைகளில், ஏதாவது ஒன்றை அடைகிறான்.

ஓங்காரத்தின் மூன்று பகுதிகளையும் தனித்தனியே உபாசித்தால் அடைவது அநித்யமான உலகங்கள். மூன்றையும் ஒன்று சேர்த்து உபாசித்தால் அடைவது முத்தி.

உத்கீதம் சாந்தோக்ய உபநிஷதத்தின் முதல் அத்யாயம் ‘உத்கீத’ வித்தையில் ஆரம்பமாகிறது. எனவே ஓங்காரத்திற்கு **உத்கீதம்** என்று பெயர்.

இயற்கையில் ஓங்காரம் உலகில் எங்கும் உள்ள பஞ்ச பூதங்களில் முக்கியமானவை காற்றும், நீரும். காற்றின் விசையால் கடல் நீரில் அலைகள் எழும் அவைகள் எழுப்பும் ஓசை அலைஓசை. சற்றுத் தொலைவிலிருந்து அலை ஓசையை உற்றுக் கேட்டால் அதில் ஓங்காரநாதம் ஒலிக்கும்.

அதேப்போன்று, காற்று வேகமாக வீசும்பொழுது ஓங்கார ஒலியைக் கேட்க முடியும். இவை மனிதர்கள் எழுப்பும் செயற்கை ஓங்கார ஒலி அல்ல.

இறைவனின் குரலாக ஒலிக்கும் இயற்கை ஒலி. அருள் ஒலி அல்லது அருளோசை எனப்படுகின்றது.

இதையே நம் வாயால் ஒலிக்கும்போது காற்றுடன் கலந்து (இயற்கை) ஒலிக்கிறது. நம் இதயத்துள் சென்று பதிகிறது. இந்த ஓங்காரத்தை முறைப்படி ஓதும் பொழுது, சப்தம் நாபியிலிருந்து எழுகின்றது.

ஜீவ தத்துவத்தில், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து பிராணன்கள், ஐந்து கோசங்கள், மனம் உள்பட இருபத்தியொரு அம்சங்கள் உள்ளன.

ஓங்காரத்தை ஓதினால் இவைகள் அனைத்தும் தூய்மைப்படுத்தப்படுகின்றன. ஆதலால் நாம் இருபத்தியொரு முறை ஓங்காரத்தை ஓதுதல் வேண்டும்.

இதன் தாத்பர்யத்தை பித்ருக் கடன் செய்பவர்கள் இருபத்தி ஒரு தலைமுறைக்கு பிண்டம் கொடுப்பதை இறந்தவர்களுக்கு திதி மற்றும் திவசம் செய்யும் ஐதீகமாகக் காட்டுகின்றனர்.

எந்தச் செயலைத் தொடங்கும்போதும் ஓங்காரத்தை ஓதித் தொடங்க வேண்டும். செயல் முடியும்போது, **ஓம் சாந்தி சாந்தி சாந்தி** என்று ஓதி முடிக்க வேண்டும்.

இவ்வாறு ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம் என்கின்றது - உலக நீதி.

பொய் நீங்கிய, மெய்ப்பொருளாய் இருக்கின்ற அந்தப் பெருமான், மேல்நிலையை அடைய உள்ளத்தில் ஓங்கார வடிவாகவே இருக்கின்றான் என்பதை “**உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா**” என்று மணிவாசகப் பெருமான் சிவபுராணத்தில் குறிப்பிடுகின்றார்.

உள்ளத்துள் ஓங்காரமாய் நிற்றல் என்பது பெருமான் **ஒலி** வடிவாகவும், **ஒளி** வடிவாகவும் நிற்றல் என்பதனைக் குறிப்பிடுவர்.

இதனையே **நாத, விந்து** வடிவம் என்று வடமொழியில் கூறுவர்.

மெய்ப்பொருளின் மேலான நிலைகளை **ஒலி, ஒளி** வடிவம் என்று குறிப்பிடுவர். மேலான ஒலியைச் **சிவம்** என்றும் மேலான ஒளியை அச்சிவத்தின் **சத்தி** என்றும் குறிப்பிடுவர்.

இதனை வரி வடிவில் **அகரம்** எனவும், **உகரம்** எனவும் குறிப்பிடுவர்.

இதனையே தமிழ் எண்கள் அடிப்படையில், "**எட்டும் இரண்டும் அறியாத என்னை, எட்டும் இரண்டும் அறிவித்தான் என் நந்தி**" என்பார் திருமூலர்.

தமிழ் எண்களில் அகரம் எட்டையும், உகரம் இரண்டையும் குறிக்கும்.

**அ+உ+ம்** என்பதன் கூட்டே **ஓங்காரம்.**

அகரம் சிவத்தையும், உகரம் சிவத்தின் சத்தியையும் மகரம் மாயையையும் குறித்து நிற்கின்றது என்பர்.

இதனால் இறைவன் நம் உயிரில் ஒலிப் பொருளாயும், ஒளிப் பொருளாயும் தோற்றுவிப்பதற்கும், இயக்குவிப்பதற்கும் துணையாய் உள்ள மாயைப் பொருளாயும் நம் உயிரில் கலந்து நிற்கின்றான் என்பதனை மணிவாசகர் உணர்த்துகின்றார்.

இறைவன் நம் உயிரில் சிவமாகவும், சத்தியாகவும் மாயைப் பொருளாகவும் இருந்து நம் உட்கருவிகளான **மனம், புத்தி, சித்தம், அகங்காரம்** எனப்படும் **மனவெழுச்சிகளை** இயக்குகின்றான் என்றும் குறிப்பிடுகின்றார்.

இறைவன் நம் உட்கருவிகளை ஓங்கார வடிவில் நின்று இயக்குவதனால்தான் நாம் அறியாமை நீங்கி, உண்மை அறிவு அல்லது பொருள் உணர்வு பெறுகிறோம் என்று மணிவாசகர் குறிப்பிடுகின்றார்.

இறைவனே நம் உயிரில் ஓங்காரமாய் நின்று பெருமானைப் பற்றிய தெளிவினையும், உயிரினைப் பற்றிய தெளிவினையும், உலகினைப் பற்றிய தெளிவினையும் அளித்து உண்மை அறிவு அல்லது மெய் அறிவினை அளிக்கின்றான் அத்தகைய ஒலி, ஒளி வடிவான இம்மகத்தான சக்திகளே மனித வாழ்க்கையினை இயக்கும் மாபெரும் சக்திகளாக விளங்குகின்றன.

ஒலிசக்தி ஓசை, சத்தங்களுக்கும், ஒளிசக்தி காட்சி களுக்கும் ஆதாரமாயிருந்து, காரண, காரிய மூலசக்திகளாகத் தொழில் செய்கின்றன.

**“உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்**
**எண்பது கோடி நினைந்து எண்ணுவன”**

என்பது ஔவை வாக்கு.

அவ்வாறே இரவாசத வேதை சித்தியில் அகர, உகர இணைப்புப் பற்றி காணும் போது, வேதை என்பது ஒரு பொருளினை அணு தன்மையாக மாற்றி, அதன்பிறகு அதனை ஒன்றாக இணைப்பது. இந்த இணைப்பில் முக்கியமானது **முப்பூ** இணைப்பு என்பதாக சித்தர்கள் சாஸ்திரம் கூறுகின்றது.

இதில் **விந்து உப்பு = சிவ உப்பு = அகரம்** எனப்படுகின்றது. அவ்வாறே, **நாத உப்பு = சக்தி உப்பு = உகரம்** எனப்படுகின்றது.

அந்த அகரத்தையும், உகரத்தையும் இணைக்க, இத்துடன் **மகரம்** என்ற அண்ட உப்பையும் சேர்க்கும் பொழுது, முப்பூ என்ற **முப்பூகுரு** கிடைக்கின்றது.

இதுவே, சித்த வைத்தியத்தில் சாகாக்கலையான அமரத்துவம் அளிக்கின்ற '**அமிர்தம்**' அல்லது "**முப்பூகுரு**" எனப்படுகின்றது.

இவ்வாறே, சித்தர் நிலை அகர, உகர இணைப்பு பற்றி காணும்போது, வாலை குருவையும், முப்பூ குருவையும் அஷ்டாங்க யோகத்தில் பத்தியம் என்ற இணைப்பால் இணைத்து செய்வது '**சிவயோகம்**' எனப்படுகின்றது.

இந்த சித்தர்கள் அனைவருமே சித்தத்தை அறிந்து, சிவத்தை உண்டு சவமாகாத இரசவாதிகள் எனலாம். இவர்கள் மெய்ப்பொருளை உள்ளேயும், வெளியேயும், வேதித்து வாதம் செய்கின்ற வேதிகளாக இருப்பதினால், இதனைப் பற்றி

சித்தர்கள் '**இரசவாதம்**' என்றும், '**முப்பூ முடித்தல்**' என்றும் கூறுவார்கள்.

இவ்வாறு, உடலையும், மனதையும் இரசவாதத்திற்கு உட்படுத்தும் உன்னதக் கலையைக் கண்டறிந்தவர்கள் இந்த சித்தர் பெருமக்கள். இவர்கள் சித்த வைத்தியர்களாகவும், யோகிகளாகவும் இன்றும் நம்மிடையே இருக்கின்றார்கள்.

இவர்கள் மூலதாரத்தில் இருக்கும் விந்து சக்தி என்ற அகரத்தை, சகஸ்ர தளத்தில் உள்ள நாத சக்தி என்ற உகரத்துடன் இணைத்து, இரண்டும் சேர்கின்ற சுழிமுனையில் அல்லது ஆக்ஞாவில் அமிர்தம் சுரக்கச் செய்வர்.

இதனை யோகத்தில் செய்வதைக் காட்டிலும், வேதித்து செய்துக் காட்டுவதில் வல்லமைப் பொருந்தியவர்களாக இருந்தனர்.

யோகத்தில் கூறப்படுகின்ற மூலாதாரத்தில் உண்டாகின்ற வெப்பத்தினாலே, காற்றினைக் கொண்டு ஊதி, குண்டலினியை உறவாக்கி, அதை ஒளி அலையாக மாற்ற முயற்சிக்கின்ற முமுக்ஷுக்கள் அந்த ஒளியே **அகத்தீ** என்றும், வாலை என்றும் வழங்குகின்றனர். இவ்வாறே, சித்தர்களின் சித்த வைத்திய முறையிலும் குருமருந்து செய்வதற்காக வாலை வடித்தல் என்ற இரசவாத முறையும் நடைமுறையில் உள்ளது.

சித்தர்களின் இரசவாத முறையில் '**அண்டக்கல்**' எது என அறியாத அஞ்ஞானிகளால், அந்த முப்பூகுரு மருந்தை

முடித்து, சாகாக்கலை என்ற அமரத்துவ நிலையை அடைய முடியாது.

அண்டக்கல்லில் இருந்தே அமிர்தம் என்கின்ற அமுரி பிரிக்கப்பட வேண்டும். அப்படி அமுரியை அண்டக்கல்லில் இருந்து பிரித்தெடுக்கும் வழி முறையை "வாலையெனும் தேவி பூசை" என்று சித்தர்கள் அழைப்பர்.

இந்த அண்டக்கல் என்பதைத்தான் வாலை, பூநீர், அண்டம், பிண்டம் என்று பலவாறாக அழைக்கப்படுகின்றது.

வாலையைத்தான் **மகாரம்** என்று பரிபாசையால் சித்தர்களால் கூறப்படுகின்றது.

இதையே "**யோகசித்தி**" எனப்படுகின்றது.

**விந்து+ நாதம் = ககரம் என்ற வாலை**

**அ+ உ + ம = அமிர்தம்.**

இதனை வாலைகுரு என்று கூறுவார்கள் சித்தர்கள். இங்கு மகாரம் என்ற ஊமை எழுத்தாகிய வாலை இல்லாமல் சாகாக்கலை என்ற கற்பதேகத்திற்குத் தேவையான அமிர்தம் சுரக்காது.

ஊமை என்ற மகாரத்தை '**ம்**' என்றும் கூறுவார்கள்.

எனவே மகாரம் **ஊமை எழுத்து** ஆனது. இதை பரிபாசையாக அகர, உகரத்தை ஊமை எழுத்து இல்லாமல் சேர்க்க முடியாது என்று சில குருமார்கள் கூறுவதுண்டு.

இதிலே, யோக சித்தியில் ஊமை எழுத்து என்பது '**ம**' (அல்லது) 'சி' என்றால்? நாயோட்டு மந்திரம் என சித்தர் திருமூலர் கூறுவது "சி" என்பது தானே? என்ற சந்தேகம் தோன்றுமானால், அதுவே ஊமை எழுத்தாக இருக்க வேண்டும் என் எண்ணம் உண்டாகுமானால், அதற்கான சந்தேகத்திற்கு சித்தர்கள் விளக்கம் அளித்துள்ளனர்.

அதாவது, ஒரு சொல்லுக்கு பல பொருள்கள் இருக்கும். அவ்வாறே பல சொற்களுக்கு ஒரு பொருள் இருக்கும். அந்த வகையிலே ஓவ்வொரு குருபரம்பரைக்கும் ஏற்ப இந்த சொற்கள் மாறுபடும் என்கின்றனர்.

**"சி" என்பது சிகாரம் = ஊமை எழுத்து = மகாரம் = வாலை.**

**"சிகாரம் என்ற சோதியாட வாலை காப்பு"**

**"தாமப்பா மகார மென்ற வாலை தன்னை"**

- அகத்தியர் அந்தரங்க தீட்சாவிதி. பாடல் 42.

திருமூலர் கூறியபடி **சிகாரம்** என்பது ஊமை எழுத்து. பாடல் 42 - ன் படி சிகாரம் என்பது வாலை, எனவே ஊமை

எழுத்து என்பதும் வாலை என்பதும், மகாரம் என்பதும் ஒன்றே ஆகும்.

அவ்வாறே, மகாரம் என்பதும், சிகாரம் என்பதும் **ஊமை எழுத்து** எனப்படும்.

**ஊமை எழுத்து = சிகாரம் = மகாரம்.**

எனவே, இந்த ஊமை எழுத்து மௌனத்தை பற்றி பறை சாற்றுகின்றது. மௌனத்தினாலேயே பிரம்மம் பிரகடனம் செய்யப்படுகின்றது என்பது உபநிடத வாக்கு.

மௌனமே இடையறாத பேச்சு என்பார் ரமண பகவான். வாக்கு, மௌனம் எல்லையுற்றது. ஆனால், மனமழிந்த மௌனம் மோனமாகும். ஔவையார் மோனமென்பது ஞானத்தின் வரம்பு என்கிறார்.

அந்த மௌனமே அஞ்ஞானத்தை எரிக்கவல்லதாகும். அந்த மௌனம் மோனமாக மாற வேண்டுமானால், நாம் ஊமையாக வேண்டும் என்பதைத்தான் சித்தர்கள் “சி” மற்றும் “**ம**” என்ற பேசாத மந்திரத்தை நமக்கு உபதேசிக்கின்றார்கள்.

அதற்கான பயிற்சிக்களமே மனம்.

**மனம் என்றால் என்ன?**

இன்றைய வாழ்வில் அது ஒரு போக்குவரத்து நிறைந்த வணிகச்சந்தை! போக்குவரத்து இருக்கும் வரை, சந்தைகள் நடைப்பெறும். சந்தைகள் நடைப்பெறும் வரை போக்கு வரத்துகளும் இருக்கத்தான் செய்யும்.

மனம் - கொடுக்கல் வாங்கல் செய்கின்ற ஒரு வங்கி போன்றது.

அதாவது, கொடுத்ததை வாங்கும். வாங்கியதைக் கொடுக்கும். அது நாம் வைத்திருக்கும் இருப்பைப் பொருத்தது. அதாவது நம்முடைய வங்கியில் உள்ள பணத்தின் இருப்புக் கணக்கின் படி, இந்த கொடுக்கல், வாங்கல் நிகழும்.

சிலருக்கு வங்கியில் பணம் போடாமலேயே, வங்கி நிரந்தர சேமிப்புக்கணக்கின் (பிக்ஸட் டெபாசிட்) முதிர்ச்சியைத் திரும்பக் கொடுக்கும்.

அதைப்போன்றே சில மகான்களுக்கு சித்தம் என்ற வங்கியில் மனம் (பணம்) இல்லாவிட்டாலும், அவர்கள் பூர்வ ஜென்மத்தில் சேமித்து வைத்த நிரந்தர சேமிப்புக் கணக்குப் (பிக்ஸட் டெபாசிட்) பதிவின்படி, சேகரிக்கப்பட்ட மனதின் வெளிப்பாடான சம்ஸ்காரங்கள் அல்லது வாசனைகள் வெளிப்பட்டு மனம் செயல்பாட்டில் இருக்கும். இயற்கையில் எல்லாமே பதிவேட்டுக் கணக்குதான்.

இவ்வாறு, மனத்திரையில் ஓடுகின்ற ஒலி, ஒளிக் காட்சியின் விளைவான சொற்காட்சிகள் அனைத்துமே,

மனப் பொருட்காட்சிகளே இவ்வாறு எண்ணங்களாக விரிவடைகின்றன.

நமது எண்ணங்களே மனம். மனமே எண்ணங்கள்.

ஒலி வடிவ சக்தியின் செயல்பாடு பேச்சு (speech) மற்றும் சத்தமாகவும், ஒளி வடிவ சக்தியின் செயல்பாடு காட்சிகளாகவும் (Images) மனதில் பதிவாகி, மறுபடி அங்கிருந்தே பதில் வினையாற்றுகின்றன என்பதை அறிய வேண்டும்.

விழியில் விழுந்து, மனதில் நுழைவன காட்சிகளாகும். காதில் விழுந்து, கருத்தில் புகுவன சொற்றொடர் ஒலிகளாகும்.

இவையிரண்டும் போய்ச்சேர்வதும், பதில் வினையாக மறுபடியும் தோன்றுவதற்குமான இருப்பிடமாகிய பிறப்பிடமே **மனம்** எனப்படுகின்றது.

மனம் என்பது, தொடங்கிய இடத்தில் முடிகிறது. முடிகின்ற இடத்தில் தொடங்குகின்றது.

ஒளிசக்தி மூலம் மனதில் காட்சிகள் பிறக்கின்றன. ஒலிசக்தி மூலம் சொற்கள் பிறக்கின்றன. மனத்திரையில் தோன்றும் காட்சிகள் மனக்கண்ணால் பார்க்கப்படுகின்றன.

மன நாடாவில் ஒலிக்கும் சொற்கள், மனதினால் கேட்கப்படுகின்றன. இந்த ஒலி, ஒளி (ஆடியோ, வீடியோ)

விளையாட்டினை நிகழ்த்தும் மாயக்கருவிதான் நம்முடைய மனம்!

இந்த மனம் அமைதிகொள்கிறபோது எண்ணங்களிலும் அமைதி நிலவுகிறது. அவ்வாறு அமைதி குடி கொண்ட மனமே ஆனந்தத்தின் பிறப்பிடம். அத்தகைய அமைதியிலும், ஆனந்தத்திலும் பூக்கின்ற எண்ணங்கள் அமைதியான அதிர்வலைகளைக் காற்றில் பரவ விடுகின்றன.

அமைதி குடிகொண்ட மனத்தினுடைய மின்காந்த அலைகள், அருகிலிருக்கும் மற்றவர்களின் மனங்களையும் அமைதியால் நிரப்புகிறது.

அமைதி நிலை கொண்ட மனங்களில், அறம் தழைக்கிறது, ஆற்றல் பெருகுகிறது. நெறி சிறக்கிறது, நேர்மை நிலைக்கிறது.

அந்த மனமே தானும் தழைத்து, பிறரையும் வாழ வைக்கிறது. அத்தகைய மனதிலே போட்டி பூசல்கள் மறைகின்றன. பொல்லாங்கு நீங்குகிறது. இதுதான் மக்களை ஈர்க்கின்ற மகத்தான மனம் எனப்படுகின்றது.

வாய் மௌனிக்க, மனம் தியானிக்க என்பதுதான் பக்தியின் பதவுரை.

**மௌனம் என்பது என்ன? தியானம் என்றால் என்ன?**

மனம் ஏவுதளம். சொற்கள் ஏவுகணை. வாய் அடங்குவது மௌனம். மனம் ஒடுங்குவது தியானம். ஆனால் நிதர்சன நிலையில் நடப்பது என்ன?

மௌனத்தினை அடையும் முயற்சியில் வாய்ச்சொற்கள் நிற்கின்றன. ஆனால் மனத்தினுள் மனச்சொற்கள், உள் உரையாடல்கள் ஓய்வின்றி ஒலித்துக் கொண்டேயிருக்கின்றன.

ஒலிபெருக்கி மூலமாக, ஒலிபரப்பு செய்தவாரே இருக்கிறது நம்முடைய மன வானொலி.

**தியானம் செய்வதில் நிகழ்வது என்ன?**

நாம் சொல்கிறோம். மனம் கேட்க மறுக்கிறது.
நாம் செய்கிறோம். மனம் ஏற்க மறுக்கிறது.
நாம் அடக்கமுயல்கிறோம். மனம் கிளர்ச்சி செய்கிறது.

ஆக மனதோடு நடைபெறும் போராட்டத்தினை தியானம் என்கிறோம். தியானம் என்ற பெயரில் மனதை யுத்த களமாக்கி ரணப்படுத்துகிறோம்.

முடிவு தோல்வியே தொடர்கதையாகி, விரக்தியே எஞ்சிய இருப்பு!

தானே மலர்ந்து மணம் பரப்ப வேண்டிய அரும்பினை, தடியால் அடித்து மலரச் செய்கின்றோம். அரும்பு சிதைந்து சிதிலமடைந்ததுதான் மிச்சம்.

தியானம் என்பது மனத்தை அடக்கும் முறையல்ல. மனதினைப் புரிந்து கொள்ளுகின்ற பெரும்முயற்சி! இதை உணர்ந்தால் மட்டுமே மனதினை வெற்றி பெறலாம்.

உண்மையான தியானத்தில், தியானிப்பவனும் தியானிக்கப்படுகின்ற பொருளும் மறைவுற்று, தியான நிகழ்வு மட்டுமே நிலை நிற்கும்.

மனம் அமைதியுற என்னதான் வழி? அமைதியெனும் அமுதம் எங்குதான் கிடைக்கும்? அதனை நுகர வழிதான் என்ன?

அமைதி என்றால் யாதெனக்கேட்டேன்? "**இருந்து பார்**" என்றான் இறைவன். அப்பயென்றால், இதில் உணர்த்தப்படுவது என்ன?

அதற்கான இன்றியமையாத் தகுதிகளை அடைவது தானே. அமைதி குடிகொள்வதற்கான தகுதிகளோடு இருந்தால், அமைதி தானே வந்து கிட்டும்.

அமைதி என்பதை முயன்று, பயின்று பெறுகின்ற பொருளல்ல! சூப்பர் மார்கெட்டில் பில் போட்டு வாங்குகிற மளிகைச் சாமான்கள் அல்ல! ஏடிஎம் - ல் கார்டு போட்டு எடுக்கின்ற இன்ஸ்டாகேஷ் அல்ல! இது முழுமையான தகுதி நிரம்பிய நிலையில் தானே கிட்டுகின்ற வரம்! அது தேடிவரும் செல்வம். நாடி வரும் நிதியம்! இறைவனும், இயற்கையும் (இறைவியும்) சேர்ந்து அருளுகின்ற அருட்கொடை.

**“காசி ராமேசுரம் கால் நோவச் சென்றாலும் ஈசனைக் காணுவையோ – குதம்பாய் ஈசனைக் காணுவையோ?”**

**“இருந்த விடத்திலிருந்து யறியாமல் வருந்தித் திரிவதென்னோ - குதம்பாய் வருந்தித் திரிவதென்னோ ?”** - குதம்பைச் சித்தர்.

இதனையே சிவவாக்கியர்

**“சாம நாலு வேதமும், சகல சாத்திரங்களும்**
**நேமமாக ஓதினும் சிவனை நீர் அறிகிலீர்”** என்கின்றார்.

தியானத்தில் அமைதி கிட்டுகின்றதா? அல்லது அமைதியில் தியானம் கிட்டுகின்றதா?

குதிரைக்கு முன்னே வண்டியைப் பூட்டுவதைப்போல, தியானத்தின் மூலமாக அமைதியை அடையும் முயற்சிகள்தான் இன்று நாம் அனைவரும் செய்துக்கொண்டுள்ள செயல் ஆகும்.

இவற்றால் விளைந்த பயன்கள் யாவை?

அமைதிக்கான வழியைப்பற்றி பேசுகின்றவர்களின் மனமும், அதைக் கேட்கிறவர்கள் மனமும் அமைதியின்றி அலைக்கழிகிறது. அமைதியைப் பற்றி எழுதியவர் மனதிலும் அமைதியில்லை. அமைதியைப் பற்றி படித்தவர்களின் மனதிலும் அமைதியில்லை. அவ்வாறே, அமைதிப் பயிற்சி

அளிப்பவரும் அமைதியிழந்து தவிக்கிறார். அமைதிப் பயிற்சி பெறுவோரும் அமைதியிழந்து அலைகின்றனர்.

**“குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்**
**குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்**
**குருடும் குருடும் குருட்டாட்ட மாடிக்**
**குருடும் குருடும் குழி விழுமாறே”** - திருமந்திரம்.

மனிதனுக்குக் கிட்டாத அமைதி, மகான்களுக்கு மட்டும் எப்படி வாய்த்தது? அதன் ரகசியம் என்ன?

**“எட்டாத பேரின்பம் எனை வந்து விழுங்கியதே”** எனப் பாடுகின்றாரே பட்டினத்தார்.

இதன் ரகசியம் என்ன?

தூய்மையான மனமே அமைதியைப் பிரசவிக்கிறது. அந்த தூய்மையான மனம் என்பது ஆசைகளற்றதாக இருக்கின்றது. அன்பு, நேசம் நிறைந்ததாக இருக்கின்றது.

அத்தகைய மனதிலேயே மௌனம் பிறக்கின்றது. அந்த மனத்தூய்மையில் மட்டுமே தியானம் கிட்டுகின்றது. அகத் தூய்மையே அமைதியின் ஆணிவேர். உண்மையிலும், அகத் தூய்மையிலும், மனத் திண்மையிலும், அமைதியெனும் கற்பக விருட்சம் தானே முளைத்தோங்கி வளர்கின்றது.

**“கல்லாப் பிழையும், கருதாப் பிழையும்,**
**கசிந்துருகிநில்லாப் பிழையும், நினையாப் பிழையும்,**
**நின் அஞ்செழுத்தைச் சொல்லாப் பிழையும்,**
**துதியாப் பிழையும், தொழாப் பிழையும் எல்லாப்**
**பிழையும் பொறுத்தருள் வாய் கச்சி ஏகம்பனே!”**

- எனப் பட்டினத்தார் பாடுவதைக் காண்க.

மனம் ஒரு மகாமேரு! அதில் விளைகின்ற சாகாமூலியே அமைதி! மனம் ஒரு பொதிகை! அதில் பிறக்கின்ற தாமிரபரணி எனும் ஜீவநதியே அமைதி!

“**மனமது செம்மையானால் மந்திரம் செம்மையாமே**” எனும் திருமந்திரப் பாடலைக் காண்க.

மந்திரத்தை ஓதும் போது, மனம் ஒரு நிலையில் நிற்காமல் போய்விடும் என்றும் சித்தர் பெருமக்கள் சொல்கின்றனர்.

“**முத்தியடா மந்திரத்தை நினைக்கும்போது மோசமடா மனந்தானும் ரெண்டாய்ப் போகும்**” என்கிறார் காகபுசுண்டர்.

“**கை விளக்குக் கொண்டு கடலில் விழுவார்போல் மெய் விளக்கு உன்னுள்ளிருக்க வீழ்குவதேன் புல்லறிவே**” - இடைக்காடர்.

மனம் ஒரு மாயப்புதையல்! மர்மக்குகை! புரியாதவனுக்குப் புதிர். புரிந்தவனுக்கு மூலிகை!

அறியாதவனுக்கு விலங்கு. அறிந்தவனுக்கு விளக்கு!

மனம் கர்ம வினைகளின் கருவி, காலத்தின் கைப்பாவை! ஆண்டியை அரசனாக்குவதும், அரசனை ஆண்டியாக்குவதும் இதன் திருவிளையாடல்கள்!

ஆனால், அதன் கணக்கு மட்டும் பிசகுவதில்லை.

குருவருள் கூடிவந்தால் நடைமேடையில் நின்றவனைக் கூட நாட்டினை ஆளவைக்கும்.

மனித வாழ்வினை இயக்குவதும், மனிதனை ஆளுவதும், ஆட்டு விப்பதும் இம்மனம் என்னும் மந்திரக்கோல் தான்.

விதைத்தவனை அறுவடை செய்ய வைப்பதும், அறுவடை செய்தவனை விதைக்க வைப்பதும் எண்ணங்களே! இதில் தினை விதைப்பதும், வினை விதைப்பதும் அவரவர் கர்ம வினைகளே!

தன்னுடைய ஒவ்வொரு சொல்லும், செயலும் சித்தமெனும் பேரேட்டில் பதிவாகின்றன எனும் உண்மை உணரப்படும்போது, சித்தம் சுத்திகரிப்பு வேலையைத் தொடங்குகின்றது.

சுத்தமான சித்தத்தில் என்றுமே இருமைகள் இருக்காது. இருமைகள் என்பது உயர்வு - தாழ்வு, நல்லது - கெட்டது, பாவம் - புண்ணியம், நட்பு - விரோதம் போன்றவைகள் காணப்படாது.

**“ஒன்று பட்டால் உண்டு வாழ்வே - நம்மில்**
**ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே**
**நன்றிது தேர்ந்திடல் வேண்டும் - இந்த**
**ஞானம் வந்தாற்பின் நமக்கெது வேண்டும்?”** - பாரதியார்.

காந்தியும் உண்ணாவிரதம் இருந்தார். உலகமே உற்று நோக்கியது. முடிவில் அவருக்கு அதில் வெற்றியும் கிட்டியது. எலும்புந் தோலுமான அரை நிர்வாண மனிதனால் முடிந்தது நம்மால் ஏன் முடியவில்லை? அவரிடம் இருந்தது என்ன? நம்மிடம் இல்லாதது என்ன? அந்த வெற்றியின் ரகசியம் என்ன?

சற்று ஆழ்ந்து சிந்திக்கவேண்டும்!

அது அவரிடமிருந்த ஆன்ம பலம். உண்மையின் அருட்சக்தி. அதனை அடைவதில் அவருக்கிருந்த அதீத வைராக்கியம்.

இவை ஏன் நம்மிடத்தில் இல்லை?

அந்த அளப்பறிய ஆன்மசக்தி நம்மிடம் எங்கே வீணடிக்கப்பட்டு, எவ்விடத்தில் விரையமாகிக்கொண்டிருக்கிறது

என்பதைத்தான் தற்போது நாம் திடமுடன் தியானிக்க வேண்டும்.

இறைக்கொடையான இந்த அருட்பெரும் சக்தி, நம்மிடம் எண்ணங்கள் எனும் வடிகாலாய் வாயிலாக எவ்விதம் வீணடிக்கப்படுகின்றது என்பதை என்றேனும் சற்று யோசித்துப் பார்த்ததுண்டா?

இடைவிடாத எண்ணங்களும், அதன் வாயிலாக மனம் சதா உள்ளே பேசுவதும், வாய் எதாவது வெளியே பேசிக் கொண்டே இருப்பதும் நம்முடைய சுவாச சக்தியினைக் குறைப்பதை கவனித்தில் கொள்வதுண்டா?

மனதில் ஓடுகின்ற ஆடியோ, வீடியோக்களுக்கு மனோ சக்தியும், மனதிடமும் பலியாகிக்கொண்டிருக்கும் மகத்தான உண்மையை நாம் ஒவ்வொருவரும் உணர வேண்டும்.

திடமனதும், தெளிவான சிந்தையுமே சித்தர் பெருமக்கள் வலியுறுத்திக்கூறும் வாழ்வியல் உண்மைகளாகும்!

நம் முன்னோர்கள் மௌனம், தியானம் என்றெல்லாம் நமக்குக் கற்றுக் கொடுத்தது எதற்காக என்றால், மனிதன் விருப்பு, வெறுப்புகள் அற்ற ஆனந்த வாழ்வை வாழ வேண்டும் என்பதற்காகத்தான்.

இதை உணர்ந்தால் எல்லாம் புரியும்!

மனத்தினுள் ஓடும் இந்த ஒலி, ஒளி (ஆடியோ, வீடியோ) எண்ணங்கள் நிறுத்தப்படும்போது, பேச்சுக்கள் நின்று மனோலயம் உண்டாகும்.

எல்லையில்லா ஆனந்தம் கிட்டி, சத்தத்தினுள்ளே சதாசிவமும், சித்தத்தினுள்ளே சிவலிங்கமும் காட்டி, கணுமுற்றி நின்ற கரும்பு கையில் கிடைக்கும்.

கிட்டிய கரும்பின் நுனிக்கரும்பு இனிப்புச்சுவை தரும் போது, அந்த சாற்றினைப் பருகி அண்ட அருள் வெளியில் கலக்கும் முக்தி நிலை வாய்க்கின்றது.

இவ்வுண்மையினை "**ஞானமறிந்தோர்க்கு நமனில்லை நாள்தோறும் பானமதையுண்டு பசியானால் - ஞானமது கண்டாலுடல் உயிருங்காயம் வலுவாகும் உண்டால் அமிர்த ரசமுண்.**" - திருவள்ளுவர் ஞானம் எனும் செய்யுள் வரிகளில் காண்க.

**எல்லாவற்றையும் ஆழ்ந்து கவனிக்கப் பழகு.**
**அனைத்தையும் ஆழ்ந்து உற்றுநோக்கப் பழகு.**
**அனைத்தையும் ஆழ்ந்து வாசிக்கப் பழகு.**
**எல்லாவற்றையும் ஆழ்ந்து சிந்திக்கப் பழகு.**

ஆழ்ந்த சிந்தனை அமைதியில் தான் பிறக்கின்றது.

அமைதியை அகமுகமாக நம் உள்ளே தேடவேண்டும். அது ஒரு ஆன்மீக பொக்கிஷம்! அங்கே அகவிருள் அகன்று அறிவொளி வீசட்டும்.

உன்னை நீயே விலகி இருந்து கவனி என்கிறார்கள் ஞானியர்.

தன்னை அறிதலே தன்னுள் இறைவனை அறிவதாகும். உன்னை அறிதலே உன்னுள் உலகினை அறிவதாகும்.

“**ஆதியாய் நின்று அறிவு முதலெழுத்து ஓதிய நூலின் பயன்**” என்ற ஔவைக் குறளால் நூல்களை ஓதிய பயன், ஆதியான அறிவை அடைவதே ஆகும் என்பது நன்கு அறியப்படுகிறது.

உன்னையறிவித்து உனக்கருள் செய்திடும் குருவினை தேடு. தெய்வம் துணை நின்றால் நிச்சயம் கைகூடும். விட்ட றை விளங்கும் போது, விளக்கொளியாய் வந்து நிற்பார்.

ஆதியை அறிவித்து, உட்கலந்த சோதியைக் காட்டும் அனுபூதிச் செல்வர். அறிவொளி ஏற்றி மெய்ச் சுடரொளி பரவச் செய்பவர். அவரே ஞான ஒளி! சொற்பதங்கடந்த கற்பகத்தரு! வினைதீர்க்கும் விநாயகர்! ஓங்காரத்தின் உட்பொருளை ஊட்டி, நாதாந்தமான மெய்ப்பொருளைக் காட்ட வல்ல சற்குரு!

குருவினுடைய அருட்பெரும் வல்லமை குறித்து, அகத்தியர் அருளிச் செய்த பாடலைக் காண்போம்:

**“வாசாதே தீட்சை வந்தோர் வாழ்ந்திருந்த**
**ஊரில் வருகாது வருகாது வினைகள் தானே.”**

**“வினையில்லை அவரை நித்தம் தரிசனமே செய்யில்**
**வேதாந்த சாரத்தே மனமும் தேறும்**
**இணையில்லை யவர் மதத்தை போற்றி நிற்க**
**வேண்டியவர் மனது வந்து திரும்பு மட்டும்**
**வினையில்லை யுண்மையதே தச தீஷை செய்யும்**
**வேதாந்த சிரோன்மணியே யுன்னைப் பார்த்தால்**
**வினையில்லை என்னுடைய உடல் பொருளும் ஆவி**
**விளங்கியதோர் உதகத்தில் தாரையூதே.”**
- அகத்தியர் அந்தரங்க தீட்சாவிதி.

பின் வரும் பாடலைக் காணுங்கள்:

**“காட்டிலிருந்தாலும் கன தவஞ்செய்தாலும்**
**காட்டுங் குருவில்லாமல் - ஞானம்மா**
**கண்டறிய லாகேதே”** - புண்ணாக்குச்சித்தர்.

தேனீயானது, மலரின் உள்ளேயிருக்கும் தேனை அருந்தாமல், இதழ்களுக்கு வெளியே சுற்றும் வரை, ரீங்காரம் செய்து கொண்டு பூவைச் சுற்றி சுற்றி வரும். ஆனால் பூவுக்குள் நுழைந்த பின்பு, ஓசை சத்தம் அடங்கித் தேனைக் குடிக்கும். மனமும் அதுபோலத் தான்! அல்லும் பகலும் அலைந்து திரிந்து உழன்று கொண்டேயிருக்கும்.

நெறியுயர்ந்த சற்குரு நேர் வாய்த்த பின்பு, அவரது மின்காந்த சக்தி அலைகள், மனதில் அமைதியினை நிரப்பி ஆனந்த பூர்த்தி அளிக்கும்.

இதனையே மனஒடுக்கம் என்பர் பெரியோர்.

“**தெளிவு குருவின் திருமேனி காண்டல்**
**தெளிவு குருவின் திருநாமம் செப்பல்**
**தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்**
**தெளிவு குருஉரு சிந்தித்தல் தானே.**” - திருமந்திரம்.

குருவின் பார்வை ஒன்றே போதும். அதுவே உன்னதமான நயன தீட்சையாகும்.

“**ஆசானு மீசானு மொன்றே யாகும்**” - திருமூலர் ஞானம்.

பெட்டியிதைப் பெறுக என இறைவன் அளிக்கின்றான். அது இருக்குமிடத்திற்கு விட்டகுறை அழைக்கின்றது. அதனை திறக்கும் சாவி குருவின் கையில். திறந்திடும் மெய்யறிவு விதியின் கையில்.

அவனருளாலே அவன் தாள் பணிதலே மெய்யறிவு தேடும் மெய்வழிச்சாலை.

மெய்க்கல்வி துணையுடன் மெய்யறிவு பெறவும், மெய்யறிவுத் துணையுடன், மெய்ப்பொருள் தேடும் பாதையில், அகர, உகர மெய்ப்பொருள் பற்றி சித்தர்கள் கூறியுள்ளதை

“**சாகாக்கல்வி**” என்று அறிந்து, அந்தக்கல்வியினைக் கற்க விதியிருந்தால் வருமென்றே அகத்திய முனிவர் கூறுகிறார்.

இந்த மெய்ப்பொருள் இரகசியத்தை அறிவதற்கான ஆர்வம் வருவது என்பது, விட்டகுறை, தொட்டகுறை வாய்த்தால் மட்டுமே உண்டாகும். அவர்களுக்கே சித்தர் பெருமக்கள் சத்குருவாய் வந்து சகல ஆசிகளையும் வழங்கிடுவர். ஆதியையும் காட்டிக் கொடுப்பர்.

**ஓம் தத் சத்!**

# பிரணவம்



அ என்ற அகரம் - அரன் (சிவன்), உ என்ற உகரம் - உமை (சக்தி) என்பதின் அடிப்படையில், இந்த சிவமும், சக்தியும் இணைந்த (அ+உ=ம்) பிரபஞ்சத்தின் தோற்ற சப்தமே “ஓம்” என்ற ஓங்கார ஒலி எனப்படுகின்றது.

ஆகவே, சக்தி இல்லையேல், சிவம் இல்லை, சிவமில்லையேல் சக்தியில்லை. இவ்விருவரும் இல்லையேல் அண்டசராசரங்களும், ஜீவராசிகளும் இல்லை.

அதுவே, பிறப்பு - இறப்பு ஏதுமற்ற ஏகாந்த நிலை.